# அருணோதயம்.

# ARUNODAYAM,

## Tranquebar Mission Journal.

VOL. XXXIII. MARCH. NO. 3.

### பொருளட்டவணை:



PRINTED AT THE EVANG. LUTHERAN MISSION PRESS.

*E. Maennig.*

1896.

## விளம்பரம்.

சென்ற 1895. ஹூ அக்டோபர் மீ 2 வ. ஒழுகமங்கலம் ஈச்சங்காட்டுத் தெருவில் கர்த்தருக்குள் பாக்கியமாய் மரித்த (மாஜி தாசில்தார் ஆரோன் தாவீது தம்பிசாமி பிள்ளை யவர்கள் பாரியை) அற்புதம்மாள் 1890. ஹூ நவம்பர் மீ 22-ம் வ. எழுதிவைத்த மரணசாதனத்தில் தன் ஞானப்பிள்ளையான ஒவ்வொருவருக்கும் ரூ 25 கொடுக்கும்படி எழுதியிருப்பதால், அவர்களின் ஞானப் பிள்ளைகள் தங்கள் ஞானஸ்நான சாட்சிப் பத்திரங்களுடன் (Baptismal Certificates) அடியில் கையொப்மிட்ட எக்சிக் கூட்டர்களுக்கு அடுத்த மே மீ முடிவுக்குள் கடிதமெழுதவேண்டியது. பணம் சேகரமான பின் இத்தொகைகள் செலுத்தப்படும்.

தரங்கை. 1896 ஹூ மார்ச்சு மீ 1 வ. } H. Beisenherz, *Missionary*. ஞா. சாமுவேல் ஐயர்.

---


# அருணோதயம்.

தரங்கன்பாடி

மிசியோன் பத்திரிகை.

No. 3. மார்ச்சு 1896.


## திருவாக்கு தியானம்.

### கிறிஸ்துவின் மரணம்.

நாம் இன்னம் பாவிகளாயிருக்கக்கொள்ள, கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே பராபரன் நம்முடையமேல் வைத்த தம்முடைய சிநேகத்தை விளங்கப்பண்ணுகிறுர் (ரோமர் ரு, அ).

தெய்வநீதி சீனாய்மலையில் அல்ல, கொல்கத்தா மலையில் பூரணமாய் வெளிப்படுகிறது. நமது இரட்சகர் சிலுவைமரத்தின் வழியே செலுத்தின பலியானது தெய்வநீதியின் கண்டிப்பை மந்தப்புத்திக்கு முதலாய்த் தெளிவாக்கும்.

அவ்வாறே, தெய்வநேசத்தின் பூரணம் பராபரன் இஸ்ரவேல் சனத்தை நடத்திவந்த அற்புத நடத்துதலில் அல்ல, கிறிஸ்துவின் அற்புத கிரியைகளில் அல்ல, கொல்கத்தா மலையில் வெளிப்படுகிறது. தெய்வநீதியைத் திருப்திப்படுத்த தெய்வ சிநேகம் செய்யக்கூடியது யாதென்று கல்வாரி மேட்டு நடுச்சிலுவை காண்பிக்கிறது.

நமது கர்த்தராகிய பராபரன் தமது சுத்த சிநேகத்தால் சர்வலோகத்தின் பாவத்தையும் மன்னித்துவிடலாம்; இதுவே அணுவளவும் தவருத தேவநீதிக்குப் பொருந்தாது.

ஆகையால், நமது கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தமது நீதிக்கும் அன்புக்கும் பொருந்திய வண்ணம் நாம் 'பாவிகளாயிருக்கக்கொள்ள நமக்காகத் தம்மைத்தாமே பலிசெலுத்தினர்.

"சிலுவையில் மரித்தவரை அறிக்கையிடாதவன் பசாசைச் சேர்ந்தவன்" என்று போலிக்கார்ப்பு சொல்லுகிறுர். ஒருவன் கிறிஸ்துவைத் தேவசுதனென்றும், மேசியாவென்றும், நமது உத்தம முன்மாதிரியென்றும், சிறந்த போதகரென்றும் பலவாருகப் புகழ்ந்து பேசியும், நமக்காகச் சிலுவையில் மரித்த

வராக அவரைக் கண்ணோக்காதவன் எப்படிப்பட்டவன் என்று போலிக்கார்ப்பின் நல்லுரை தெரிவிக்கும்.

மனிதரின் பாவக்கொடுமையால் பரா்பரனுக்குச் சொல்லிமுடியாத கோபம். இதனால் தெய்வநீதி திருப்தியைத் தேடுகிறது. அளவிறந்த தெய்வநீதிக்கு அளவற்ற திருப்தியுண்டாக்க எந்த மனிதனால் ஆகும். எல்லா மனிதரும் பாவிகளாயிருக்கையில், ஒரு பாவி மற்றொரு பாவிக்காக ஈடுசெலுத்துவதெப்படி.

தேவனும் மனிதனுமாகிய பரிசுத்த இயேசுவே தக்க பதிலாளி, ஒன்றான பிணையாளி. ஒரு பரிசுத்தனும் நிறைவேற்றக் கூடாததை அவர் ஒருவரே நிறைவேற்றக் கூடியவர். அவர் ஒருவரால் நிறைவேறுவது யாவருக்கும் போதுமானது.

அவருடைய மரணத்தால் பாவத்துக்கு மன்னிப்பு மரணத்துக்கு மரணம்; சாத்தானுக்கு வலிமை நாசம்; தெய்வநீதிக்கு திருப்தி; கிருபைக்கு ஆளுகை. ஏனெனில் கிறிஸ்து நமக்காக மரித்தார். பாவிகள் உத்தரிக்கவேண்டிய யாதொன்றையும் அவர் உத்தரிக்காமல் போகவில்லை. ஆகையால் இயேசு பாவிக்கு மோட்சமானார், அவனுக்குச் சீவனானார், அவனுக்கு இரட்சிப்பானார், அவனுக்கு நீதியானார்.

சிலுவையில் அறையுண்ட கிறிஸ்து நம்மைப் பிதாவோடு ஒப்பரவாக்கினார். அவருக்குள் நமக்குப் பராபரனோடு சமாதானமுண்டு (கொலோ. க, உ௰; ரோமர் ரு, ம).

நீ என்ன சொல்லுகிறாய், என் ஆத்துமாவே. என் பாவங்கள் மன்னிக்கப்படக்கூடாதபடிக்குப் பெரிதாயிருக்கிறதென்கிறாயோ. நான் ஒருமுறை மன்னிப்புப் பெற்றபின் செய்த பாவங்களுக்கு மன்னிப்பு இல்லை என்கிறாயோ. நான் நெடுநாளாய்ப் பராபரனுடைய கிருபையை அசட்டை பண்ணினதால் அதை நான் திரும்பவும் பெறக்கூடியவனல்ல என்கிறாயோ. அப்படிச் சொல்லாதே, நீ சொல்லும் எல்லா நியாயங்களைப் பார்க்கிலும் பராபரனுடைய கிருபையும் கிறிஸ்துவினுடைய புண்ணியமும் அதிகப்பெரிது என்பதை நினைத்துக்கொள். மன்னிப்புப் பெறுமுன் செய்த பாவங்களுக்காக மாத்திரமல்ல, மன்னிப்புப் பெற்றபின் செய்த பாவங்களுக்காகவும் கிறிஸ்து பாடுபட்டு உத்தரித்தார்.

பராபரன் தமது ஒரே பேறான குமாரனைப் பாவிகளுக்காக மரணத்துக்கு ஒப்புக்கொடுத்தது சுத்த கிருபை, அவர் நமது பிணையாளியாக நமக்கு ஈடுசெலுத்தும்படி செய்தது சுத்த கிருபை, அவர் ஈடுசெலுத்தினதை நாம் ஈடுசெலுத்தினது போல் அங்கிகாரம் செய்ததும் சுத்த கிருபை.

நமது மனஸ்தாபமாவது நமது விசுவாசமாவது அவரை இப்படிப் பாடுபடுவதற்கு ஏவினதல்ல. நாம் பிறவாததற்கு





முன்னமேயே கிறிஸ்து நமக்காக மரித்தாரல்லவோ. அன்றியும் நமது மனஸ்தாபமென்ன, விசுவாசமென்ன. பராபரனுடைய கிருபையின் ஈவுகள்தானே. உன்னை ஒப்பற்றவண்ணமாய்ச் சிநேகித்து, உனக்காக உயிரைக் கொடுத்த உன் இரட்சகரை ஒருபோதும் மறவாதே, என் ஆத்துமாவே.

இவ்வன்பைச் சீவனுள்ளநாள்
எல்லாம் மறக்கமாட்டேன்;
இத்தாலொழிய வேறொன்றால்
இனி என் நெஞ்சை ஆற்றேன்.
நீர் என் வெளிச்சம் என் பலம்,
நான் மாளும்போதும் என்திடம்,
என் கன்மலையும் பங்கும்.
ஆ, என் மனமகிழ்ச்சியே,
நான் உமக்குள் பிழைக்கவே
ஒத்தாசை செய்திரங்கும்.

## பத்திராதிபர் குறிப்புகள்.

கிரீன்லாந்து தேசத்தில் யாதொரு பரதேசி ஒரு வீட்டில் தங்க மனதாயிருந்தால், அவ்வீட்டின் கதவைத் தட்டி: இந்த வீட்டில் பராபரன் இருக்கிறாரா என்று கேட்பது வழக்கம். வீட்டார் ஆம் என்று சொன்னால் மாத்திரம் பரதேசி பிரவேசிப்பான். எந்த வீட்டில் குடும்பாராதனை நடக்கிறதோ, எந்த வீட்டில் தேவவசனம் வாசிக்கப்படுகிறதோ, எந்த வீட்டில் செபஞ்செய்யப்படுகிறதோ அந்த வீடு தெய்வ ஸ்தலமாம். அங்கே திரியேக பராபரன் தமது சகல ஆசீர்வாதங்களோடும் வாசஞ்செய்கிறார்.

---

குடும்பாராதனையின் அவசியத்துக்குப் பல நியாயங்களுண்டு (க) நாம் நமது குடும்பங்களில் பராபரனைத் தினந்தோறும் நினைப்பதும் நினைப்பூட்டிக்கொள்வதும் அவரது பிரிய சித்தம். (உ) எக்காலத்துத் தெய்வபக்தர்களும் (திருஷ். ஆபிரகாம் யோபு முதலியவர்கள்) இவ்விஷயத்தில் முன்மாதிரி காண்பித்திருக்கிறார்கள். (ந) குடும்பாராதனை குடும்பத்தில் நல்லைக்கியத்தையும் மெய்ச்சந்தோஷத்தையும் விளைவிக்கிறது. (ச) குடும்பாராதனை ஆத்துமாக்களைக் கிறிஸ்துவண்டைக்கு வழிநடத்தவும், இரட்சிக்கவும் பெரிய உதவியாம். சிநேகிதனே உன் வீட்டில் குடும்பாராதனை கிரமமாய் நடக்கிறதா.

நாளையத்தினத்தைக் குறித்து மேன்மை பாராட்டாதே. நாளைக்குப் பக்திமான்களாவோம் என்று வாக்குறுதி செய்வோர் உண்டு. இவர்கள் வாக்கு எப்பயனும் தராத வெறும் வாக்கே. வேறுசிலர் நாளைக்குத் தர்மிஷ்டிகளாவோமென்றும், வேறுசிலர் தங்கள் தப்பிதத்துக்காக நாளைக்கு மன்னிப்புக் கேட்போமென்றும், வேறுசிலர் தாங்கள் உண்டுபண்ணின நஷ்டத்துக்கு நாளைக்கு ஈடுசெலுத்துவோம் என்றும் சொல்வர். இன்றைக்கு அவர்கள் ஒரு முயற்சியும் செய்யார். இன்றைக்கு அவர்கள் பொல்லார், நாளைக்குத்தான் அவர்கள் நல்லார். இன்றைக்கு அவர்கள் பேய்கள், நாளைக்கு அவர்கள் சம்மனசுகள். நாளைக்கு உண்ணப்போம் உணவின் பலத்தால் இன்றைக்கு வேலைசெய்வது எப்படி அசாத்தியமோ, அப்படியே நாளைக்குச் செய்யப்போகிற யாதொன்றுக்காக இன்றைக்குச் சந்தோஷப்படுவது பைத்தியமாம். நாளையத்தினம் என்பது பசாசு நமக்குக் காட்டும் பொய் மோட்சமாம்.

## கரேனர் என்ற சாதியாரிடம் நடக்கும் மிசியோன் வேலை.

இவர்கள் பர்மா தேசத்தில் வீடுவாசலின்றி அலைந்துதிரியும் வனவாசிகளென்றும், இவர்கள் மார்க்கச் சரித்திரம் சில அம்சங்களில் நமது வேதத்தின் பூர்வ சரித்திரத்துக்கு ஒப்பானதென்றும், "காணமற்போன புத்தகம்" ஒன்றைக் கடல் கடந்து வெள்ளை மனிதர் கொண்டுவருவார்கள் என்கிற பாரம்பரை அவர்களுக்குள் பலமாய் நடமாடுகிறதென்றும் கேள்வியுற்ற ஐரோப்பிய கிறிஸ்தவர்களுக்குள் மிக்க அனுதாபமுண்டானதே அந்தச் சாதியாருக்குள் சுவிசேஷ பணிவிடை ஆரம்பித்ததற்குப் பிரதம காரணமாம்.

கரேனருக்குள் நடக்கும் மிசியோன் சரித்திரத்தில் விளங்கும் சுவிசேஷ செயத்துக்கு மேற்பட்டதாக, வேறெந்த சரித்திரத்திலும் சம்பவங்கள் இருக்குமென நாம் நம்போம். ஆகையால் அச்சரித்திரத்தினின்று சில அம்சங்களை எடுத்துரைத்தல் நமது விசுவாச ஊன்றக்கட்டுதலுக்கு உதவுமென்று நம்புகிறோம்.

கரேனரில் அனேகர் பர்மா தேசத்து இதர குடிகளால் அடிமைகளாக நடத்தப்பட்டார்கள். அவர்கள் அனுபவித்த கொடுமைகள் அவர்களைத் தேசத்தின் நிர்மானுஷியமான பாகங்களுக்கும் மறைவான இடங்களுக்கும் ஓட்டிவிட்டன. இவ்



வாறு ஓடின கரேன அடிமைகளில் ஒருவன் 1824-26 வருஷம் பர்மாகாரருக்கும் இங்கிலீஷ்காரருக்கும் நடந்த யுத்தகாலத்தில் ஒரு பர்மா கிறிஸ்தவனால் மீட்டுக்கொள்ளப்பட்டான். மீட்படைந்த அந்த அடிமையின் நாமம் கோதாபியு என்பது. அவனை மீட்டுக்கொண்ட எசமான் அவன் கையில் கொடுத்த ஒரு சிறு புத்தகத்தால் கிறிஸ்துமார்க்கத்தைப் பற்றிய முதல் எண்ணங்கள் அவனுக்குள் உண்டாயின. பிறகு அவன் இந்தியாவில் திருப்பணி செய்துவந்த ஜட்ஸன் போதகரால் மெய்மார்க்க போதனை பெற்றான். மூடாந்தகாரனும் மகா துன்மார்க்கனும் திருடனும் கொலைஞனும் ஆகிய அந்த அடிமை சுவிசேஷத்தின் பலத்தினால் கரேனரின் பெரிய அப்போஸ்தலன் ஆனது மகா வியப்புக்குரிய விசேஷமன்றோ.

இரண்டு வருஷங்களுக்குப்பின் ஜட்ஸன் போதகருக்கு உதவியாய் வந்த போர்ட்மன் போதகர் அம்மட்டும் ஒருவராலும் கவனிக்கப்படாதிருந்த கரேனருக்குள் சுவிசேட பணிவிடைசெய்யப் புகுந்தார். அவருக்குத்துவி பாஷகனாய்ப் போனவன் மேற்குறித்த கோதாபியு என்ற அடிமை.

போர்ட்மன் போதகர் பிரவேசஞ் செய்த முதற் கிராமத்துக் குடிகள் அவரை வரிவாங்க வந்த ஒரு அங்கிலேய துரை என்றெண்ணி பயந்து நடுங்கி ஓட்டம்பிடித்துக் காட்டுக்குள் புகுந்துகொண்டார்கள். போதகரோ அவர்களைத் தொடர்ந்து செல்லாமல் அவர்கள் திரும்பி வருமளவும் கிராமத்தில் தங்கியிருந்தார். அந்த மிலேச்சர்கள் அவரைத் துரைத்தன உத்தியோகஸ்தன் அல்லவென்று அறிந்துகொண்டபின் அவரிடம் நெருங்கி வந்தார்கள். அதிகப் பழக்கமானபின் கரேனரின் காணமற்போன புஸ்தகத்தை அவர் கொண்டுவந்திருக்கிறாரோ என்று அவரைக் கேட்க, அவர் அவர்களுடைய பாரம்பரையை அறியாதிருந்ததால் தக்க மறுமொழி சொல்லக் கூடாதவராயிருந்தார்.

பிறகு அவர், பன்னிரண்டு வருஷங்களுக்கு முந்தி ஒரு இங்கிலீஷ்காரன் ஒரு பரிசுத்த புஸ்தகத்தை ஒரு கரேன தீர்க்கதரிசியினிடம் கொடுத்ததாகவும், அவனிடத்தில் அதைப் பெற்றுக்கொண்ட சனங்கள் அதை வாசிக்கக் கூடாமல் அது ஓர் வேளை தாங்கள் நெடுநாளாய் எதிர்ப்பார்த்திருந்த பரிசுத்த ஆகமமாய் இருக்குமோவென்று உத்தேசித்து அதை ஒரு துணியில் பத்திரமாய்ச் சுருட்டி வைத்திருப்பதாகவும் அறிந்துகொண்டார்.

அந்தச் சனங்கள் இந்தப் போதகரைக் கொண்டு மேற்கூறிய புத்தகம் இன்னதென்று அறிந்துகொள்ளலாம் என்று நம்பி அப்புத்தகத்தைக் கொண்டுவரும்படி ஆட்களை அனுப்பி

ஞர்கள், மூன்றுநாட் கழித்து அப்புத்தகம் கொண்டுவரப்பட்டது. போதகர் அதைத் திறந்து பார்த்தபொழுது அது சங்கீத ஆகமத்தோடு சேர்த்துக் கட்டப்பட்ட ஒரு செபபுஸ்தகமென வெளியாயிற்று. இதையே ஆதாரமாகக்கொண்டு போர்ட்மன் போதகர் தாம் அவர்களிடம் வந்த நோக்கத்தைத் தெளிவாய் அறிவித்துக் கிறிஸ்துவைப் பிரசங்கித்தார்.

அங்கே முதல் முதல் ஞானஸ்நானம் பெற்றவன் மேற்குறித்த கோதாபியு. அக்காலமுதல் அவன் தன் சாதிசனத்தின் மனம்திருப்புதலுக்காக உழைப்பதையே தன் சீவியத்தின் லெக்காக்கினுன். கிறிஸ்துவுக்காக அவனுக்கிருந்த பக்திவைராக்கியம் மிகுதி. அவன் சுயமாகவும் தன்னந்தனியேயும் நாலு திக்கிலும் நீண்டபயணங்களைச் செய்து சுவிசேஷத்தைப் பிரசங்கித்தான். ஒரு காலத்தில் அத்தேசத்துக்குக் கொள்ளைநோய்போல் இருந்த அவன் தன் சனத்துக்கு நித்திய சுகத்தைக் கொடுக்கும் உழைப்பாளியானுன்.

அவன் மதுர வார்த்தைகளைக் கூறும் சாதூரிய பிரசங்கி அல்ல, அவன் பிரசங்கப்போங்கு தாக்ஷிண்யமற்ற வனுந்தர பிரசங்கியாகிய யோவான் ஸ்நானகனின் போங்காயிருந்தது. அந்த மிலேச்சரின் கவனத்தைக் கவர்வதற்கு அவனே தக்க பிரசங்கி. அவன் தனக்குத் தெரிந்த சொற்ப சங்கதிகளைத் திரும்பத் திரும்பப் பிரசங்கித்து சிலுவையில் அறையுண்ட கிறிஸ்துவை முக்கியபொருளாகக் காண்பித்து வந்தான்.

கரேனர் நடுவே உழைத்த சகல போதகருக்கும் முன்தூதன் அவனே. அவன் அமர்ந்திருந்த காலம் கிடையாது. கரேனரைக் குணப்படுத்தும்படி அவன் பட்டபாடு வேறெவரும் படவில்லை.

போர்ட்மன் போதகர் தமது வேலையை ஆரம்பித்த தாவாய் என்ற கிராமம் ஒரு தோப்பிலுள்ளது. அங்கிருந்த மரக்கிளைகளில் அனேக மணிகள் கட்டியிருந்தன. காற்றடிக்கும்போதெல்லாம் கிளைகள் அசைய மணிகள் அடிபடும். புத்த சமயத்தின் ஐம்பது சந்நியாசமடங்களும் நூறு கோவில்களும் உள்ள அந்த பயங்கர வனத்தில் மேற்கூறிய மணிகளின் தொனிகள் அதிக ப்யங்கரத்தை உண்டாக்கின. இவ்வந்தகாரத்தின் நடுவே போர்ட்மன் போதகர் கிறிஸ்துவின் சிலுவையை நாட்டலானுர்.

அவர் இந்த இடத்தைத் தமது ஊழியத்தின் தலைமைஸ்தானம் ஆக்கிக்கொண்டு சுற்றுக்கிராமங்களுக்குச் சென்று பிரசங்கம் செய்தார். அவர் சென்றவிடம் எங்கும் சனங்கள் அவரைப் பட்சமாய் ஏற்றுக்கொண்டார்கள். ஓரிடத்தில் கிராமத்தார் யாவரும் உட்காருவதற்குப் போதுமான இடமுள்ள



ஒரு பந்தல் போட்டுவைத்து அதில் இராமுழுவதும் உட்கார்ந்து பிரசங்கம் கேட்டார்கள்.

அந்தப் போதகர் இவ்வாறு மூன்று வருஷக்காலமாய் வனுந்தரத்திலுண்டான மோசங்களிலும் அஞ்ஞானிகளாலுண்டான மோசங்களிலும் திருடரால் உண்டான மோசங்களிலும் தமது திவ்விய பணிவிடையை நடப்பித்து வந்தார். பிறகு அவர் மரண வியாதிப்பட்டுப் பரம இளைப்பாற்றிக்குள் பிரவேசித்தார். அவர் மரிக்குமுன் பதினெட்டுப்பேர் ஞானஸ்நானம் பெறுவதைக்கண்டு அவருக்கு உதவியாக வந்த மேஸன் என்ற போதகரின் ஆறுதலான வார்த்தைகளைக் கேட்டார். அவருடைய தேகம் தாவாய் கிராமத்தில் இடிந்து கிடந்த ஒரு அஞ்ஞானக் கோவிலண்டை க்ஷேமிக்கப்பட்டது. அவரது கல்லறையின்மேல் பதித்திருக்கும் வாசகம் வருமாறு:

> ‘‘உங்களைப் பேய் வணக்கத்தை விடும்படி போதித்தவர் ஆர், துன்மார்க்கத்தை விட்டுச் சன்மார்க்கத்துக்கு உங்களைக் கொண்டுவந்தவர் ஆர், உங்களுக்கு வேதாகமங்களையும் திருநாட்களையும் செபங்களையும் கொணர்ந்தவர் ஆர் என்று சுற்றிலுமுள்ள கிறிஸ்தவ கிராமத்தாரைக் கேளுங்கள். அவர்கள் சொல்லும் வருமொழி இங்கே க்ஷேமிக்கப்பட்டிருக்கிறவருக்குப் புகழ்ச்சியாம்’’ என்பதே.

மேற்கூறிய மேஸன் போதகர் நாற்பது வருஷக்காலம் மிசியோன் வேலையைத் தொடர்ந்து செய்தார். அவர் வேலையால்விளைந்த நன்மைகள் கொஞ்சமல்ல, ஆயினும் கரேன கிறிஸ்தவர்கள் கிறிஸ்துமார்க்கத்தின் சுகிர்தத்தை உபத்திரவம் இன்றி அனுபவிக்கவில்லை. அவர்கள் துன்பத்தில் பொறுமையோடு கனிகொடுப்பதால் தங்கள் விசுவாசத்தின் உண்மையை வெளிப்படுத்த வேண்டியவர்களாயிருந்தார்கள். பர்ம ராசாங்கத்தார் இந்த ஏழை கிறிஸ்தவர்களைப் படுத்தின பாடு ஆதித் திருச்சபையாருக்கு ரோமராயர்கள் உண்டுபண்ணின பாடுகளுக்குக் குறைந்ததல்ல. சுருக்கிச்சொன்னுல் கரேன கிறிஸ்தவர்களை அவர்கள் வனவிலங்குகள்போல் நடத்திஞர்கள். ஆயினும் இக்கொடிய துன்பத்தின் நடுவே கரேனர் திருச்சபை ஆலாவிருக்ஷம்போல் செழித்தோங்கிற்று.

1878-ம் வருஷம் அந்தக் கிறிஸ்தவர்கள் கோதாபியு என்ற பெரிய அப்போஸ்தலனின் ஞானஸ்நானத்தை நினைவுகூறும் ஐம்பதாம் வருஷ யூபிலி கொண்டாடி பசீன் என்ற இடத்தில் அவன் பெயரால் ஒரு ஞாபக மண்டபம் கட்டினுர்கள். அதற்குச் சென்ற முப்பதிஞயிரம் ரூபாய்க்கு மேற்பட்ட செலவு தொகையைக் கரேன கிறிஸ்தவர்களே சேர்த்துக் கொடுத்தார்

கள். அப்பொழுது அக்கிறிஸ்தவர்களின் தொகை இருபதினு யிரம்.

---

## சன்மார்க்க சரிதைகள்.

### க. தெய்வ நியாயத்தீர்ப்பு.

ஸ்பானியா தேசத்திலுள்ள ஓர் கிராமத்தில் ஒரு குடித்தனக்காரனுக்கு இரண்டு பிள்ளைகள், ஆண் ஒன்று பெண் ஒன்று. அத்தேசத்துப் பிரமாணங்களின்படி எந்த வாலிபனுக்குச் சீட்டு விழுந்ததோ அவன் பட்டாளத்தில் பதிந்துகொண்டு யுத்தசேவகன் ஆகவேண்டும். ஆக மனமில்லாதவன் ஒரு பெருந் தொகை கொடுத்தாவது ஒரு பதிலாளியைச் சம்பாதிக்க வேண்டும். அப்படியே அந்தக் குடியானவனும் அவன் மனைவியும் தங்கள் ஏகபுத்திரனைத் தப்புவிக்கும் பொருட்டு தங்கள் கன்று காலிகளையும், பண்டம்பாடிகளையும் விற்று, வேண்டிய தொகையைச் சேர்த்து வைத்துவிட்டு, ஒரு பதிலாளியைத் தேடிப்பிடிக்கும்படி அடுத்த ஊருக்குப் பயணம் புறப்பட்டார்கள்.

புறப்படுகையில் தங்கள் ஏகபுத்திரியை வீட்டில் இருத்திவிட்டுப் போனார்கள். துலாறு என்ற அடுத்த வீட்டுக்காரன் அவர்கள் மாடு கன்று முதலியவற்றை விற்றுப் பணம் சேகரித்ததைச் சாடையாய்க் கவனித்துக் கொண்டேயிருந்தான். அவர்கள் வெளியேறினவுடனே அவன் முகத்தில் மூடி போட்டுக்கொண்டு அவ்வீட்டுக்குள் நுழைந்து தெருக்கதவை சார்த்திக் கெட்டித் தாழ்ப்பாள் போட்டபின் மேற்கூறிய பெண் தனித்திருக்கும் மடைப்பள்ளிக்குப் போய் அவள் எதிரில் வரவே, அவள் திகிலடைந்து வாய் திறக்குமுன் அவளைப் பிடித்து அவள் வாயில் துணியைத் திணித்து, அவளை ஒரு தூணோடு சேர்த்துக் கட்டிவைத்து, அவளுடைய பெற்றோர் பணத்தைப் பத்திரம் பண்ணின இடத்தைக் காண்பிக்கும்படி அவளை இம்சித்து, காண்பியாவிட்டால் கையில் வைத்திருந்த கட்டாரியால் குத்திவிடுவதாகப் பயமுறுத்தினான். அவள் பணமிருந்த இடத்தைச் சுட்டிக் காட்டவே, அவன் அதை அபகரித்துக்கொண்டு, அவள் வாய்த் துணியை எடுத்துவிட்டான். அப்பொழுது அவள் அவனை இன்னான் என்று எவ்வாறோ அறிந்துகொண்டு: நீ செய்தது மகா ஈனமான காரியம், நாம் இன்றளவும் அண்டை வீட்டு அடுத்தக்காரராயிருந்து தாயாய்ப் பிள்ளையாய்ப் பிழைத்திருந்தும், நீ எங்களைக் கொள்ளையடித்தாயல்லவா என்றாள்



அப்படியானால் என்னை உனக்குத் தெரிகிறதோ என்று அந்தத் திருடன் கேட்க, அவள்: ஆம் தெரிகிறது; நீ துலாறு தானே என்றாள். அப்பொழுது அவன்: பெண்ணே, நீ நிர்ப்பாக்கியவதி, நீ இப்பொழுது சொன்ன சொல் உன் கழுத்துக்குக் கத்தி என்பதை அறிந்திரு; நீ என்னை ஆர் என்று அறிந்துகொண்டதால், நீ சாகவே சாகவேண்டும். நீ என்னை நியாயஸ்தலத்தில் நிறுத்திவைக்க நான் சம்மதிக்கேன் என்றான். அதைக் கேட்ட மாது புலம்பி அழுது, அவன் பெயரை வெளிப்படுத்துவதில்லை என்று சொல்லியும் அந்தப் படுபாதகனின் கல்மனம் இளகாமல்: நான் உனக்குச் செய்யக்கூடிய உபகாரம் ஒன்றே ஒன்று; நீ சாகவேண்டிய விதத்தை நீயே தெரிந்துகொள்ளச் சம்மதிக்கிறேன்; நான் உன்னைக் குத்திப்போடவா, உன் தொண்டையை நெரித்துப்போடவா, அல்லது உன்னைத் தூக்கிப்போடவா, சொல் என்று கேட்டான்.

அவள் திரும்பத் திரும்பத் தன் சீவனுக்காகக் கெஞ்சிக் கேட்டும் அவன் உடன்படாமையால், அவள் கொஞ்சம் காலதாமதம் உண்டாகக் கூடும்படி: என்னைத் தூக்கில் போட்டுவிடு என்றாள். அப்பொழுது அந்தக் கொடியன் அவளை மரணசெபம் சொல்லச் சொல்லி, ஒரு சிறு மேசையின்மேல் ஏறி, ஒரு உத்திரத்தில் ஒரு கயிற்றைக் கட்டி, அதில் ஒரு சுருக்குப் போட்டு, அது சரியாய்க் கழுத்தில் மாட்டுமோ என்று பரிட்சிக்கத் தன் கழுத்தில் மாட்டி இழுத்துப் பார்த்தான். அச்சமயத்தில் அவன் ஏறியிருந்த மேசை ஒரு புறமாய்ச் சாய்ந்து விழுந்தது. அவன் உத்திரத்துக்கும் தரைக்கும் இடையே தொங்கி, தன்னைத் தப்புவித்துக்கொள்ள வெகுவாக முயன்றான். சித்திபெறவில்லை. அவன் அந்தப் பெண் புறமாகத் திரும்பிப் பார்த்தும், அவள் கைகால் கட்டுண்டிருந்ததால் அவள் ஒரு உதவியும் செய்யக் கூடாதிருந்தாள்.

இத்தறுவாயில், அப்பெண்ணை விவாகம் செய்யக் கோரியிருந்த வாலிபன் ஒருவன் தற்செயலாய் அந்த வீட்டுக்கு வந்து கதவைத் தட்டினான். திறப்பாரில்லை. அவன் அதிகமதிகமாய்த் தட்டவே, அக்கம் பக்கத்துச் சனங்களெல்லாம் திரண்டு வந்து, கதவை உடைத்து உட்புகுந்தார்கள். அவர்கள் கண்ட காட்சியை விபரிக்கத் தேவையோ. பெண் கட்டுண்டு களைப்புற்றுப் பூப்போல் சோர்ந்திருக்கிறாள். துலாறு குற்றுயிராய்த் தூக்கில் தொங்குகிறான். அவன் சட்டைப் பையினின்று பணம் கலகலவென்று விழுகிறது.

சிலர் பெண்ணை அவிழ்த்துவிட்டார்கள். சிலர் கயிற்றை அறுத்துத் திருடனை இறக்கிப்போட்டார்கள். இயன்ற சிகிச்சையெல்லாம் செய்து, ஸ்மரணை வரப்பண்ணி, வைத்திய

சாலைக்குக் கொண்டுபோனார்கள். அவன் பிழைத்துக்கொள்வான் என்கிற நம்பிக்கையுண்டு.

இந்தச் சமாச்சாரம் ஸ்பானியா தேசத்திலுள்ள பிகூராஸ் என்ற இடத்தினின்று சமீபகாலத்தில் வந்தது.

## சுவிசேஷ ஜெயம்.

உல்லியம்ஸ் என்ற போதகர் கூஅ௱உ௲ ஞ் முதல் முறை ராராத்தொங்க தீவைச் சந்தித்தபொழுது அத்தீவார் அனைவரும் விக்கிரகத் தொழும்பரான அஞ்ஞானிகள்; கூஅ௱ ௲ச ஞ் அவர் அத்தீவை விடும்பொழுது எல்லாருங் கிறிஸ்து மார்க்க அனுசாரிகள். அவர் அங்கே புகும்பொழுது அவர்களுக்கு வரிவடிவான பாஷையே கிடையாது; அவர் அங்கிருந்து புறப்படும்பொழுது அத்தீவார் தேவ வசனத்திலுள்ள அநேக பங்களைத் தங்கள் சுயபாஷையில் வாசித்தார்கள். அவர் அங்கே பிரவேசிக்கும்பொழுது திருநாள் ஆசரிப்பு அத்தீவில் இல்லவே இல்லை; அவர் அங்கிருந்து வெளிப்படும்பொழுது கர்த்தருடைய நாளில் அத்தீவாரில் ஒருவனும் யாதொரு லௌகீக வேலையையும் செய்யான். அவர் அத்தீவில் காலடி வைத்த நாளில் மெய்த் தெய்வ ஆராதனை என்பது என்னவென்று அத்தீவாருக்குத் தெரியாது; அவர் கால்கள் அத்தீவை விடும்பொழுது அத்தீவெங்கும் வீட்டுக்கு வீடு காலை மாலை குடும்பாராதனைகள் நடந்தன. — சுவிசேஷ ஜெயமே ஜெயம்.

## புதிய புத்தகங்கள்.

இனிய ஞானகீதங்கள்: கூஅ௱கூஎ - ம் ஞ் சங்: ஷான்ஸ் ஐயரால் "இனிமையான ஞானப்பாட்டுகள்" என்று பெயருள்ள ஒரு சிறு பாட்டுப் புத்தகம் இராகங்களுடன் பிரசுரமாயிற்று. அதன் பிரதிகள் கிடைப்பது அரிதானபின் கூஅ௱அஅ - ம் ஞ் மற்றொரு ஞானப்பாட்டுக் கொத்து அதே பெயரோடு வெளிப்பட்டது. இதில் முந்தின பாட்டுப் புத்தகத்தில் இருந்த பாட்டுகளில் சிலவும், வேறனேகப் புதுப்பாட்டுகளும் அடங்கியிருந்தன. இப்புத்தகத்தில் இராகங்கள் சேர்த்திராமையால், அதை உபயோகிப்பது அனேகருக்குச் சங்கடமாயிருந்தது. இப்பொழுது நூதனமாய் வெளிப்பட்டிருக்கிற "இனிய ஞானகீதங்கள்"



என்னும் திரட்டு அதில் அடங்கிய சுவையும், எழுப்புதலுமான ஞானப்பாட்டுகளின் நிமித்தமும், அவற்றோடு சேர்ந்திருக்கும் இராகங்களின் நிமித்தமும் தமிழ் நாட்டுச் சுவிசேஷ கிறிஸ்தவர்கள் யாவருக்கும் மிகப் பிரீதியாய் இருக்கத்தக்கதாம். இதிலுள்ள இனிமையான இராகங்கள் பாடுவதற்கு மாத்திரமல்ல, வாத்திய வாசிப்புக்கும் உபயோகமாகும் பொருட்டு நாலு தொனிகளாய் அச்சிடப்பட்டிருக்கின்றன.

பரிசுத்த சரித்திரம். (முதற் பங்கு - பழைய ஏற்பாடு): Kurtz சாஸ்திரியார் கர்மானியா பாஷையில் இயற்றிய இந்தப் பிரயோசனமான நூலின் மொழிப் பெயர்ப்பு ஏற்கனவே இருமுறை பதிப்பிக்கப்பட்டிருப்பதால், இதன் பயன் அனேகமாய்த் தெரிந்திருக்கும். இப்பொழுது வெளிப்பட்டிருப்பது இந்நூலின் மூன்றும் பதிப்பு. இது முற்றும் திருத்தப்பட்டிருப்பதால் இதன் பாஷை நடை முந்தின பதிப்புகளைப் பார்க்கிலும் அதிகத் தெளிவும் சுத்தமுமானது. அன்றியும் முற்பதிப்புகளில் இராத புதுச் சங்கதிகள் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. பராபரனுடைய இரட்சணிய ஆலோசனை காலக் கிரமத்தில் நிறைவேறி வந்த வயணத்தைத் தெரிவிக்கும் ஓர் வழிகாட்டியாகிய இந்த நூல் நமது சபையாருக்கும், விசேஷமாய் மிசியோனூழியருக்கும் மிக உபயோகமானது. வாசிப்பதற்கும் படிப்பதற்கும் இலகுவாயிருக்கும்படி பலவகை எழுத்துக்கள் இப்பதிப்பில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றன.

பரிசுத்த சரித்திரம். (இரண்டாம் பங்கு - புதிய ஏற்பாடு): முந்தினதற்கு ஒத்ததாகிய இப்புத்தகம் முந்தினதைப் போல் புதுப் பதிப்பன்று. இது முற்றும் புதிய மொழி பெயர்ப்பாம். முந்தின பதிப்பில் கருகலாகவும் தெளிவற்றும் இருந்த யாவும் இப்புதுப் பெயர்ப்பால் நிவர்த்தியானது இதைப் படிப்போர்க்கும் படிப்பிப்போர்க்கும் பெரிய சந்தோஷம். இப்பங்கும் மேற்கூறிய பங்கும் நமது பள்ளிக்கூடங்களின் உயர்ந்த வகுப்பில் கையாடத் தக்கனவாம்.

பரி. லூக்கா எழுதின சுவிசேஷத்தின் சுருக்க வியாக்கியானம்: இது சங்: ஈலபெல்டு ஐயரால் இயற்றப்பட்டது. சுருக்கமும் தெளிவுமான இந்த வியாக்கியான நூல் வேத அறிவுக்கு மிகவும் உபயோகமானது. இதைக் கையாடுவோர் இதற்குமுன் பிரசுரமான மத்தேயு, மாற்கு சுவிசேஷங்களின் வியாக்கியானங்களையும் வைத்திருப்பது அவசியம்.

## 1895-ம் வூ முடிவில் நமது மிசியோன் சேகரங்களின் நிலைமையைக்காட்டும் கணக்கு.

| நம்பர். | சேகரம். | ஆராதனை ஸ்தலங்கள். | அசைச்சேர்ந்த இடங்கள். | ஞானஸ்நானம். அஞ்ஞானிகள். | ஞானஸ்நானம். கிறிஸ்தவ பிள்ளைகள். | மற்றச் சபைகளிலிருந்து ஏற்றுக்கொள்ளப்பட்டவர்கள். | திடப்படுத்தப்பட்டவர்கள் | விவாக சோடு | மரித்தவர்கள். | கிறிஸ்தவர்களின் மொத்தத் தொகை. | இவர்களில் இராப்போசனம் வாங்கக் கூடியவர்கள். | ஞானஸ்நானத்துக்கு ஆயத்தமானோர். | ஐரோப்பிய மிசியோனரிகள். | சுதேச குருமார். | பிரசங்கிமார். | உபதேசிகளும் உதவி உபதேசிகளும். | சுவிசேஷகர். | முகாமைச் சங்கத்தார். |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | தரங்கன்பாடி ... ... | 2 | 4 | 2 | 13 | 1 | 15 | 9 | 15 | 587 | 315 | ... | 4 | 1 | ... | ... | ... | 3 |
| 2 | காரைக்கால் ... ... | 2 | 5 | ... | 2 | ... | 1 | ... | ... | 62 | 36 | ... | ... | 1 | ... | ... | ... | ... |
| 3 | பிறையாறு ... ... | 8 | 38 | 6 | 48 | 6 | 41 | 17 | 34 | 1258 | 785 | ... | 4 | ... | ... | 3 | ... | 3 |
| 4 | மணிக்கிராமம் ... ... | 3 | 19 | ... | 22 | 1 | 11 | 2 | 16 | 409 | 181 | 62 | ... | 1 | ... | 2 | ... | ... |
| 5 | மாயபுரம் ... ... ... | 13 | 81 | 23 | 48 | 1 | 20 | 17 | 41 | 1307 | 664 | ... | 1 | 1 | ... | 3 | ... | ... |
| 6 | சீர்காழி ... ... ... | 5 | 53 | 13 | 48 | 1 | 26 | 4 | 75 | 1133 | 345 | ... | ... | 1 | ... | 3 | 1 | ... |
| 7 | மணல்மேடு ... ... | 4 | 26 | 4 | 7 | ... | 4 | 1 | 4 | 331 | 183 | ... | ... | 1 | ... | 1 | ... | ... |
| 8 | கும்பகோணம் ... ... | 12 | 17 | 1 | 15 | 1 | 1 | 2 | 13 | 341 | 194 | ... | ... | ... | ... | 3 | ... | ... |
| 9 | நாகப்பட்டணம் ... ... | 1 | 6 | 1 | 12 | ... | 2 | 5 | 5 | 223 | 153 | ... | ... | ... | ... | ... | ... | ... |
| 10 | திருவாரூர் ... ... | 2 | 8 | ... | 2 | 1 | ... | 1 | ... | 69 | 42 | ... | ... | 1 | ... | ... | ... | ... |
| 11 | தஞ்சாவூர் ... ... | 10 | 35 | 12 | 35 | 31 | 45 | 14 | 16 | 957 | 581 | ... | 1 | 1 | ... | 3 | 1 | 4 |
| 12 | அணைக்காடு ... ... | 2 | 8 | ... | 7 | ... | ... | 2 | 11 | 211 | 103 | ... | ... | 1 | ... | ... | ... | 3 |
| 13 | திருச்சினாப்பள்ளி ... ... | 7 | 18 | 3 | 22 | 8 | 14 | 7 | 17 | 597 | 315 | ... | 1 | ... | 1 | 1 | ... | 7 |
| 14 | மேட்டுப்பட்டி ... ... | 8 | 12 | ... | 23 | 2 | 1 | 3 | 16 | 460 | 268 | ... | ... | ... | 1 | 2 | ... | 3 |
| 15 | புதுக்கோட்டை ... ... | 9 | 11 | 1 | 9 | 1 | ... | 1 | 5 | 232 | 127 | ... | 1 | ... | ... | 1 | ... | ... |
| 16 | மதுரை ... ... ... | 12 | 54 | 39 | 36 | 13 | 13 | 9 | 13 | 1036 | 439 | 39 | 3 | 1 | 1 | 5 | ... | ... |
| 17 | திண்டுக்கல் ... ... | 6 | 18 | 2 | 18 | 27 | 4 | 5 | 9 | 498 | 209 | 93 | 1 | 1 | ... | 6 | 2 | 4 |
| 18 | கோயமுத்தூர் உள்ளூர் சபை | 2 | 11 | 4 | 6 | 5 | 8 | 6 | 7 | 306 | 149 | ... | ... | ... | 1 | ... | ... | 4 |
| 19 | ஷை கிராம சபை ... | 3 | 11 | 4 | 5 | 10 | 2 | 5 | 1 | 132 | 83 | ... | 1 | ... | ... | 1 | ... | ... |
| 20 | ஈரோடு ... ... ... | 1 | 8 | 15 | 3 | ... | ... | ... | 6 | 113 | 47 | ... | ... | ... | 1 | ... | ... | ... |
| 21 | ஏற்காடு ... ... ... | 1 | 3 | ... | 7 | 3 | 3 | ... | 4 | 75 | 46 | ... | ... | ... | ... | 1 | ... | 2 |
| 22 | பெங்களூர் ... ... | 1 | 10 | 8 | 13 | 2 | ... | 5 | 9 | 346 | 196 | 23 | 1 | ... | ... | 1 | 1 | ... |
| 23 | சென்னை, புரசபாக்கம் ... | 1 | 8 | 7 | 31 | 9 | 19 | 8 | 21 | 882 | 445 | ... | 1 | 1 | ... | 1 | ... | 4 |
| 24 | ஷை ராயபுரம் ... ... | 1 | 11 | 3 | 5 | 2 | 6 | 3 | 4 | 167 | 100 | ... | ... | 1 | ... | ... | ... | 3 |
| 25 | ஷை கிராம சபை ... | 8 | 14 | 491 | 12 | 3 | 8 | 10 | 7 | 807 | 96 | 216 | ... | ... | 1 | 4 | 1 | 4 |
| 26 | செங்கல்பட்டு ... ... | 4 | 11 | 11 | 6 | 7 | 1 | 4 | 2 | 168 | 76 | 15 | 1 | ... | ... | 1 | ... | ... |
| 27 | விழுப்புரம் ... ... ... | 6 | 15 | 25 | 21 | 1 | 11 | 2 | 15 | 555 | 185 | 11 | 1 | ... | ... | 4 | ... | ... |
| 28 | பண்ணுருட்டி ... ... | 3 | 6 | ... | 7 | 5 | ... | 1 | 3 | 126 | 48 | ... | ... | ... | 1 | ... | 1 | ... |
| 29 | கூடலூர் ... ... ... | 5 | 10 | 1 | 8 | 10 | 1 | 3 | 5 | 327 | 175 | ... | 1 | ... | ... | ... | 2 | ... |
| 30 | விருத்தாசலம் ... ... | 1 | 2 | ... | ... | ... | ... | ... | 2 | 35 | 5 | 5 | 1 | ... | ... | ... | ... | ... |
| 31 | தென்னூர் ... ... ... | 3 | 4 | 8 | 4 | 1 | 5 | 1 | 8 | 188 | 82 | 3 | ... | ... | ... | ... | 1 | ... |
| 32 | சிதம்பரம் ... ... ... | 7 | 63 | 10 | 32 | ... | 20 | 9 | 34 | 850 | 434 | ... | ... | 1 | 1 | 2 | ... | ... |
| 33 | இரங்கூன் ... ... ... | 1 | 9 | ... | 10 | 1 | 1 | 1 | 2 | 250 | 80 | ... | ... | 1 | ... | ... | 1 | 3 |
| | | 154 | 609 | 694 | 537 | 153 | 283 | 157 | 420 | 15038 | 7187 | 23 | 467 | 15 | 8 | 48 | 11 | 47 |

## மிசியோன் சமாச்சாரங்கள்.

### க. பிறையாற்று வட்டத்தைச் சேர்ந்த இச்சிலடி.

இந்தக் கிராமத்திலுள்ள நமது சபை டேனிஷ் ராசாங்கத்தார் இங்கே அரசுபுரிந்த காலத்தில் ஸ்தாபிக்கப்பட்ட பழைய சபை. இங்கே ஒரு செபாலயம் கட்டப்பட வேண்டுமென்ற ஆசை இருபது வருஷங்களுக்கு முன்னமேயே உற்பத்தியாகியும் கர்த்தருடைய கிருபையினால் இப்பொழுதுதான் நிறைவேறிற்று. செப வீட்டுக்கு கூஅூாகூடு-ம் ௵ மார்ச்சு ௴ உ௳. சங்: பைசனர்த்ஸ் ஐயரவர்களால் அஸ்திவாரம் போடப்பட்டது. அக்கட்டடம் கர்த்தருடைய ஆசீர்வாதத்தால் சென்ற டிசம்பர் மாதத்தின் துவக்கத்திலேயே முற்றுப்பெற்றது. அதன் பிரதிஷ்டை அந்த மாதத்தில் உஉ-ம் தேதியாகிய வருகையின்நாலாம் ஞாயிற்றுக் கிழமையில் நிறைவேறிற்று. அன்றுதினத்தில் சபைகுருவும் அம்மாளவர்களும் எதிர்பாராவண்ணம் அசௌக்கியப்பட்டிருந்ததால் அவர்கள் அச்சமயத்தில் அதில் பங்குபெறக் கூடாதிருந்தது யாவருக்கும் விசனம்.

பிரதிஷ்டைதினம் அதிகாலையில் திரளான சபையாரும் பிள்ளைகளும் செபாலய முகப்பில் கூடிவர, இச்சிலடி பள்ளிக்கூட மாணுக்கர் ஓர் ஸ்தோத்திர கீதம் பாடினார்கள். பிறகு யாவரும் திரண்டு, வாத்திய முழக்குடன் சங்: பைசனர்த்ஸ் ஐயரவர்கள் பங்களாவை நோக்கிச் சென்றார்கள். அங்கே இச்சிலடிப் பிள்ளைகள் நூறும் சங்கீதத்தின் பேரில் இயற்றப்பட்டிருந்த ஓர் பாடலைப் பாடியபின் பென்ஷன் சுவாமிதாஸ் உபாத்தியார் ஐயரவர்களுக்கு வந்தனோபசாரம் வாசித்தபின் அவர்களுக்கு மாலை சூட்டி, கைக்கடிகார வெள்ளிச் சங்கிலி ஒன்று ஞாபகசின்னமாக அளிக்கப்பட்டது. ஐயரவர்கள் பிரதி வாழ்த்துதல் சொன்னபின் சபையார் சங்: சீனியர் பம்பரீன் ஐயரவர்களை அங்கிருந்து அழைத்துக்கொண்டு இச்சிலடிக்கு வந்தார்கள். பிரதிஷ்டைக்கு தியாக்கோனி அம்மாள்மார்களும் கனம்: சீட்சுமன் துரை, துரைசானியும், சங்: துவொர்க்கோவிச் ஐயரும் வெகுசனத்திரளும் வந்திருந்தது மிகச் சிறப்பாயிருந்தது. சங்: சீனியர் அவர்கள் பிரதிஷ்டை ஆராதனையை நடத்தி, அன்று திருபவாக்கியத்தின் பேரில் எழுப்புதலாய்ப் பிரசங்கித்தார். பிரதிஷ்டை சுவிசேஷ வாக்கியத்தின் பேரிலியற்றப்பட்டிருந்த ஓர் கீர்த்தனையை இச்சிலடிப் பிள்ளைகள் இனிதாய்ப் பாடினார்கள். பிறகு அக்கிராமத்து வாத்தியார் அச்சபையையும் கட்டடத்தையும் பற்றிய ஓர் ரிப்போர்ட்டை வாசித்தார். இந்தக் கட்டடத்துக்காக கனம்: ஆலோசனை சங்கத்தார் கொடுத்துதவியது நூ 200. நமது மிசியோன் டிரெக்தர் அவர்கள் அனுப்பிய தொகை நூ 212 - 12. சபையார் சேகரித்தது நூ 83 - 13 - 10. மற்ற சிநேகிதர்களால் வந்தது நூ 21. செலவான மொத்தத் தொகை நூ 520 - 3 - 9. சபையார் இந்தக் கட்டடத்தின் அலங்காரத்தை அதிகமாக்கும்படி ஓர் தாழ்வாரம் கட்டக் கருதியும் போதுமான தொகை இல்லாமையால் அதற்கு அஸ்திவாரம் போட்டு தளவரிசையோடு விடப்பட்டிருக்கிறது. அதற்காக இப்பொழுது சேகரமாயிருக்கும் தொகை, ஓடு விற்ற வரவு நூ 7; பிரதிஷ்டை தினஉண்டியில் நூ 6 - 9 - 2; சிநேகிதர்கள் கொடுத்தது நூ 21 - 9 - 2.



சபையின் ஆத்துமாக்கள் 161. இவர்களில் நற்கருணை வாங்கக்கூடியவர்கள் 112. பள்ளிக்கூடம் வருஷந்தோறும் விருத்தியாகி வருகிறது. ஆராதனைக்குக் கிரமமாய் வந்த ஒரு பெண்ணுக்குக் கிறிஸ்தியான் உபதேசியாரால் ஒரு வெகுமதி கிடைத்தது. இச்சபையின் விருத்திக்கென்றும் செபாலய கட்டடத்திற்கென்றும் அதன் உள்ளலங்காரத்திற்கென்றும் உதவி செய்த யாவருக்கும் வந்தனம் கூறியபின் புஷ்பதாம்பூல பன்னீர் மரியாதை நடத்தப்பட்டது.

இக்கட்டடம் கர்த்தருக்கு மகிமையும் ஆத்துமாக்களுக்கு நன்மையுமாகப் பயன்பட அவரே கிருபைசெய்வாராக.

M. N. I.

---

### உ. செமினேரி.

செமினேரி மாணுக்கருக்குக் கடந்த ஜனுவரி மாசக்கடைசி வாரத்தில் எழுத்துப் பரிட்சையும், பெபுருவரி ௴ 10 ௳ வாய்மொழிப் பரிட்சையும் நடந்தது. இப்பரிட்சையில் தேறி வெளியே அனுப்பப்படுகிறவர்கள் 16 பேர்; அவர்கள் நாமங்களும் அவர்களுக்குக் குறிக்கப்பட்ட இடங்களுமாவன:

#### உயர்ந்த செமினேரி.

| | |
|---|---|
| தா. ஞானதிக்கம் | திண்டுக்கல். |
| எ. பாக்கியம் | சென்னபட்டணம். |
| ஞா. தாவீது | அம்மாபட்டி (திண்டுக்கல்). |
| மி. இஸ்ரவேல் | சென்னபட்டணம். |
| அ. சாமுவேல் | மதுரை. |
| மு. பவுல் | சென்னபட்டணம். |

| | |
|---|---|
| ஞானசிகாமணி | மேட்டுப்பட்டி. |
| சா. கிறிஸ்தியான் | விழுப்புரம். |
| மு. இயேசடியான் | விக்கிரவாண்டி (விழுப்புரம்). |

### தாழ்ந்த செமினேரி.

| | |
|---|---|
| ஞானமுத்து | ஈரோடு. |
| த. தாவீது | சீயாழி. |
| சா. கிறிஸ்தியான் | கூடலூர். |
| ஞானரெத்தினம் | சென்னபட்டணம். |
| ம. யாக்கோபு | மதுரை. |
| ஆசீர்வாதம் | பெரியகுளம் (திண்டுக்கல்). |
| ப. தேவசகாயம் | சென்னபட்டணம். |

---

## வர்த்தமான சங்கிரகம்.

India:—1857 இந்தியாவில் இருந்த இருப்புப்பாதையின் நீளம் 400 மைல். இப்போது முன்பின் 20,000 மைல் தூரம் ரெயில் வழியாய்ப் போக்குவரவு செய்வதற்கான சாதனங்கள் ஏற்பட்டிருக்கின்றன. சென்ற வருஷம் இந்திய இருப்புப்பாதை வரவு மொத்தத்தில் 45 லட்ச ரூபாய் ஜாஸ்திப்பட்டிருக்கிறது. — நாளது ஆண்டு அந்தத்தில் மகாஜன சபை கல்கத்தாவில் கூடவேண்டுமென்று தீர்மானம் பண்ணியிருக்கிறார்கள். — இரட்சண்ய சேனையின் தளகர்த்தராகிய ஜெனரல் பூத் சென்ற மாதம் சென்னைக்கு வந்திருந்து அகதிகளான பஞ்சபறுதிகளுக்கு ஜீவனம் உண்டுபண்ணும்படிக்கான சில ஏற்பாடு செய்யக் கருத்துக் கொண்டார், ஏழை சனங்களுக்காக விஸ்தாரமான புறம்போக்குத் தரிசு நிலங்களைத் துரைத்தனத்தாரிடத்தில் கேட்டுவாங்கி, அவற்றில் ஜீவனத்துக்குக் கஷ்டப்படுகிறவர்களைக் குடியேற்றவேண்டுமென்பது அவர் கருத்து.

Palastine:—பலஸ்தீனுவில் தற்கால சனத்தொகை 6½ லட்சம். இதில் அரை லட்சம்பேர் யூதர். இவர்கள் பல திக்குகளிலுமிருந்து, வேதபூமியில் வந்து கூடுவதினால், யூதர் சனசங்கியை நாளொருவண்ணம் விர்த்தியாகி வருகிறது. சென்ற பத்து வருஷத்துக்குள் ஐரோப்பாவைச் சேர்ந்த பல நாடுகளிலுமிருந்து வெகு மும்மரமாய் பலஸ்தீனுவை நாடிச் சென்ற யூதர் தொகை கொஞ்சமல்ல. — துருக்கியிலுள்ள கிறிஸ்தவர்கள் கல்வி, செல்வம், நாகரீகத்தில் விருத்தியடைவதைக் கண்டு, மகம்மதியர் பொறாமைகொண்டு, அவர்களை எவ்விதத்திலும் ஒடுக்கி அடக்க முயல்வதே, சமீபத்தில் அங்கு நடந்த சங்காரத்துக்குக் காரணம்.

---

PRINTED BY E. MAENNIG AT THE EV. LUTH. MISSION PRESS, TRANQUEBAR.



### A. ௲அ௱௯௰௬-ம் வருஷத்தில் வந்த வரவு.

#### 1. கையோப்பப் பணமும் நன்கொடைகளும்.

| | Rs. | As. | P. |
|---|---|---|---|
| சீர்மையில் உள்ள சிநேகிதரால் அனுப்பப்பட்ட தொகை | 232 | 11 | 0 |
| Mr. J. Zietzschmann ... ... ... ... | 5 | 0 | 0 |
| ,, E. Maennig ... ... ... ... | 3 | 0 | 0 |
| Rev. R. Frölich ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, H. Gaebler ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, R. Dworkowicz ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, R. Schomerus... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, F. Schad ... ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, S. Zelime ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, O. Kellerbauer ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, D. Bexell ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, A. Gehring ... ... ... ... | 2 | 0 | 0 |
| ,, H. Beisenherz ... ... ... ... | 3 | 0 | 0 |
| ,, W. Christian ... ... ... ... | 1 | 0 | 0 |
| ,, N. Devasahayam ... ... ... | 1 | 0 | 0 |
| ,, J. A. Njanabishegam ... ... | 1 | 0 | 0 |
| ,, V. Manuel (1891-94) ... ... ... | 8 | 0 | 0 |
| ,, G. Isaac ... ... ... ... ... | 1 | 0 | 0 |
| Teacher Arulanandam, Anupapalayam ... | 1 | 0 | 0 |
| ,, Devaireckam, Ackur ... ... ... | 0 | 2 | 0 |
| Evang. Devasagayam ... ... ... | 0 | 4 | 0 |
| | 283 | 1 | 0 |

#### 2. உண்டி சேர்ப்பு (on Reformation-day).

| | | | |
|---|---|---|---|
| Tranquebar ... ... ... ... | 6 | 4 | 2 |
| Porayar ... ... ... ... ... | 4 | 5 | 6 |
| Pursavaukum ... ... ... ... | 3 | 12 | 0 |
| ,, Boarding School ... ... ... | 1 | 5 | 0 |
| Rayapuram ... ... ... ... | 1 | 14 | 0 |
| Madras District ... ... ... ... | 0 | 8 | 6 |
| Dindigul ... ... ... ... ... | 0 | 4 | 0 |
| Kombei ... ... ... ... ... | 0 | 4 | 0 |
| Cuddalore N. Town ... ... ... | 1 | 0 | 8 |
| ,, O. Town ... ... ... | 0 | 2 | 0 |
| ,, District | 0 | 4 | 4 |
| Panrutti ... ... ... ... ... | 0 | 3 | 0 |
| Villapuram ... ... ... ... ... | 0 | 15 | 8 |
| Bangalore ... ... ... ... ... | 3 | 1 | 5 |
| Trichinopoly ... ... ... ... | 3 | 8 | 0 |
| Carried over. | 27 | 12 | 3 |

| | Rs. | As. | P. |
|---|---|---|---|
| Brought forward | 27 | 12 | 3 |
| Pudukottah … … … … … | 1 | 5 | 3 |
| Koteikarenpatti … … … … | 0 | 2 | 0 |
| Yercaud … … … … … | 1 | 1 | 1 |
| Tanjore … … … … | 3 | 4 | 0 |
| Mayaveram … … … … … | 1 | 6 | 10 |
| Therilandur … … … … … | 1 | 8 | 6 |
| Madura … … … … … | 1 | 14 | 11 |
| Coimbatore Town … … … … | 3 | 14 | 0 |
| „ District … … … | 2 | 6 | 0 |
| Erode … … … … … | 0 | 6 | 0 |
| Vriddhachalam … … … … | 0 | 8 | 0 |
| Karikal … … … … … | 0 | 6 | 0 |
| Negapatam … … … … | 1 | 2 | 0 |
| Tiruvalur … … … … … | 0 | 13 | 10 |
| Metupatti … … … … … | 0 | 8 | 4 |
| Manelmedu … … … … … | 0 | 5 | 6 |
| Chidambaram … … … … | 0 | 4 | 0 |
| | 49 | 0 | 6 |

B. ௲௮௯௫-ம் ௵ ஜனுவரி ௴ முதல் டிசம்பர் ௴ வரைக்கும் உள்ள கணக்கு விவரம்.

| | Rs. | As. | P. |
|---|---|---|---|
| போன வருஷத்து பாக்கி கையிருப்பு … … | 737 | 6 | 7 |
| கையொப்பப் பணமும் நன்கொடைகளும் … … | 283 | 1 | 0 |
| உண்டி சேர்ப்பு … … … … | 49 | 0 | 6 |
| வேதாகம விற்பனை கிரய வரவு … … … | 112 | 6 | 6 |
| வட்டி வரவு … … … … | 22 | 4 | 10 |
| | 1204 | 3 | 5 |
| விற்பனைக்கு வாங்கின வேதாகமங்களுக்குக் கிரயம் | 246 | 12 | 0 |
| | 957 | 7 | 5 |

C. மேற்படி தொகை காக்கப்பட்டிருக்கும் விதம்.

| | Rs. | As. | P. |
|---|---|---|---|
| Government Securities … … … | 500 | 0 | 0 |
| Gov. Savings Bank-இல் இருக்கிறது … … | 70 | 1 | 0 |
| மற்றவர்களிடத்தில் வட்டிக்கு விட்டிருக்கிறது … | 350 | 0 | 0 |
| கையிலுள்ள தொகை … … … … | 37 | 6 | 5 |
| ஆக மொத்தம் | 957 | 7 | 5 |

*H. Beisenherz,*

பொக்கிஷதாரி.

